உ

சன்மார்க்க போதினி வர்க்கம்

# ராமாயணச் சுருக்கம்

ஆரம்ப பாடசாலை மாணுக்கர்களுக்காகவே எழுதப்பட்டது

இது
சிவகெங்கை கல்வி இலாகா டிப்டி இன்ஸ்பெக்டர்
எஸ். பஞ்சாபகேச சர்மா பி. ஏ., எல். டி.,
எழுதியது

துரைத்தனத்தார் அங்கீகரித்தது





மதுரை
வி. சூ. சுவாமிநாதன்
வெளியிட்டது

 [விலை அணு 0-2-6

# முன்னுரை

---

நமது முன்னோர்களின் பெருமையையும், தர்மவழிகளை யும் எடுத்துரைக்கும் பூர்வ கதையான ராமாயணத்தைக் குழந்தைகளுக்குத் தக்கபடி கற்பிக்கவேண்டியது அவசியம். எலிமெண்டரி பாடசாலையில் ஐந்து வருஷம் படித்த பிறகும் நமது குழந்தைகளுக்கு ஸ்ரீ ராமர் யார், என்றுகூடத் தெரி யாமல் இருப்பது மிக்க விசனிக்கத்தக்கது. இதுபற்றியே நமது நாட்டுத் தற்கால கல்வியை சிலர் குறைகூறுகின்றனர். நமது முன்னோரின் பெருமையை குழந்தைகளுக்கு அடிக்கடி ஞாபகப்படுத்துவதும் அவர்களுடைய மேன்மை குணங்களை எடுத்துக்கூறி மனதிற் பதியச்செய்வதும் நமது சிறுவர்களை சன்மார்க்க வழியில் நடத்தத் தூண்டுகோலாகும்.

எலிமெண்டரி பாடசாலைப்பிள்ளைகள் படித்துத்தெரிந்து கொள்ளும்படி ராமாயணக் கதையை எடுத்துச் சொல்லும் சிறு புஸ்தகம் எளிய நடையில் இல்லாததே மேற்சொன்ன குறைவுக்கு முக்ய காரணம். அதை நீக்கும் பொருட்டு இச் சிறு புஸ்தகத்தை சுருக்கமாகவும், குழந்தைகளின் மனப் பான்மைக் கேற்றவாறும் எழுதவேண்டிய அவசியத்தால் முக்ய கதையை மாத்திரம் எழுதியிருக்கிறேன். இது சம்மந்த மாக செய்யவேண்டிய சீர்திருத்தம் இருப்பின் அதை நன்றி யுடன் ஏற்றுக்கொள்வதுடன் சிறுவர்களுக்கென்று எழுதிய இப்புத்தகத்தை ஆதரிக்கும்படி பிரார்த்திக்கிறேன்.

எஸ். பஞ்சாபகேச சர்மா



ஸ்ரீராமர்



மகாவிஷ்ணு

ஸ்ரீராமஜெயம்

# ராமாயணச் சுருக்கம்

## முகவுரை

குழந்தைகளே, சில நாளைக்கு முன் உங்களுக்கு "ஸ்ரீராம நவமி" என்று ஒரு நாள் லீவு விட்டது ஞாபகம் இருக்கிறதா? இந்த லீவு எதற்காகத் தெரியுமா? ஸ்ரீராமர் பிறந்த தினம் ஸ்ரீராம நவமி. அது பங்குனி அல்லது சித்திரை மாதத்தில் சுக்லபக்ஷம், நவமி தினம் வரும். அன்று எல்லோரும் ஸ்ரீராம படத்தை அலங்காரம் செய்து பூஜை செய்கிறோம். பஜனை பண்ணுகிறோம். ஸ்ரீராமரை நாம் தெய்வமெனக்கொண்டாடுகிறோம். அவர் விஷ்ணுவின் அவதாரம்.

உலகத்தில் ராக்ஷஸர்கள் சாதுக்களை உபத்திரவம் செய்தார்கள். அவர்களை நாசம் செய்ய விஷ்ணு, உலகத்தில் தசரத சக்ரவர்த்திக்குப்பிள்ளையாக அவதரித்து, துஷ்டர்களை நாசம் செய்து லோகத்திற்கு க்ஷேமத்தைக் கொடுத்தார். அவர் தம்முடைய நடத்தையால், மனிதன் செய்ய வேண்டிய கடமை இன்னின்னவை என்று காட்டினார். அவருடைய கதையை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம்.

அக்கதையைக்கூறும் புஸ்தகத்திற்கு ராமாயணம் என்று பெயர். அது பெரிய புஸ்தகம். அதை நீங்கள் பெரியவர்களானல் படிக்க விருப்பங்கொள்வீர்கள். இப்பொழுது அவரது கதையைச் சுருக்கமாக உங்களுக்குச் சொல்லுகிறேன்.

இக்கதையினுல் நீங்கள் ராமர் எப்படித் தகப்பனுர் வார்த்தையை மேலாகக்கொண்டுராஜ்யத்தை விட்டுவிட்டுக் கஷ்டப்பட்டார் என்றும், சகோதரர்கள் எவ்வளவு ஒற்றுமையாக இருந்தார்கள் என்றும், ராமர் பகைவரிடத்திலும் எவ்வளவு அன்பு பாராட்டினுர் என்றும், ஹனுமார் எஜமானனிடத்தில் எவ்வளவு விசுவாசமாக சுவாமி காரியத்தில் உழைத்தார் என்றும், சீதை கணவனிடத்தில் எவ்வளவு பிரியமாகவும் உண்மையாகவும், இருந்தாள் என்றும், சுக்ரீவன் எவ்வளவு உண்மையுள்ள சிநேகிதனுக இருந்தான் என்றும், பராக்ரமமுள்ள ராமர் தமது பராக்ரமத்தை நல்வழியில் உபயோகித்து லோகத்திற்கு க்ஷேமத்தைச் செய்யப் பிரயாசைப்பட்டார் என்றும் விளங்கும்.

இந்தக்கதை மிகவும் நல்ல கதை. இதைக் கவனமாகப் படியுங்கள். சிறு குழந்தைகளுக்குத் தாய்மார்கள் ராமனுடைய சரித்திரத்தை தாலாட்டும் பாட்டாகப் பாடுவார்கள். ஏன் ? அவரது நல்ல குணம் உங்களுக்குப் படியவேண்டுமென்பது தான். ராமர் கதையைப் படித்தால் உங்களுக்கு எல்லாவித க்ஷேமமும் உண்டாகும்.

---

ஸ்ரீ ராமாய நம:

# ராமாயணச் சுருக்கம்

## தசரதர்

வட இந்தியாவில் அயோத்தி என்றொரு பட்டணம் உண்டு, அந்நகரத்தில் அநேக ஆயிரம் வருஷம் முன்னமே தசரதர் என்றொரு அரசர் ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார். அவர் சூரிய குலத்தைச் சேர்ந்தவர். அவர் மிகவும் தைரியசாலி. பத்துத்திசைகளிலும் தன்னுடைய ரதத்தைச் செலுத்தி, எல்லா அரசர்களையும் ஜயித்து, சக்ரவர்த்தியான படியால் "தசரதச் சக்கிரவர்த்தி" என்று அவருக்குப் பெயர். அவர் குடிகளை வெகு அன்பாக நடத்திவந்தார். குடிகளிடமிருந்து ஆறிலொருபாகம் வரிதான் வாங்கி வந்தார். அவருக்கு மூன்று மனைவிகள் உண்டு. மூத்தவள் கௌசல்யை. இரண்டாவது கைகேயி. மூன்றாவது சுமித்திரை. அரசனுக்கு எல்லாவித சௌக்கியமும் இருந்தும் ஒரு விசாரம் மாத்திரம் இருந்தது. தனக்குப்பின் ராஜ்யத்தை

ஆளக் குழந்தைகள் இல்லை என்பதைக் குறித்துத்தான் அவர் கவலைகொண்டார்.

---

## ஸ்ரீ ராம ஜெனனம்

சில பெரியோரைக் கலந்து யோசனை கேட்டதில் சக்கிரவர்த்தி ஒரு யாகம் செய்தால் கடவுள் புத்திரர்களை அனுக்கிரகம் செய்வார் என்று சொன்னார்கள். பக்கத்துக்காட்டில் தவம் செய்துகொண்டிருந்த கலைக்கோட்டு மஹரிஷியை வரவழைத்து ஒரு யாகத்தைச் செய்து முடித்தார். சில நாள்கழிந்ததும்கௌசல்யைக்கு ராமர் பிறந்தார். கைகேயிக்கு பரதரும், சுமித்திரைக்கு லக்ஷ்மணரும் சத்துருக்கினரும் பிறந்தார்கள். இந்த நாலு குழந்தைகளையும் அரசர் அதிக சந்தோஷத்துடன் அருமையாக வளர்த்து வந்தார். குழந்தைகளுக்குத் தக்க வயது வந்ததும், நல்ல குருவைத்தேடி அரச குமாரர்களுக்கு உரிய கல்வியை ஏற்றவாறு கற்பித்தார். அரச குமாரர்கள் வேதம். சாஸ்திரம். ராஜ்ய நிர்வாகம், யானையேற்றம், குதிரை யேற்றம், வில்வித்தை இவைகளில் செம்மையாகத் தேர்ந்து விளங்கினார்கள். இவர்கள் பெரியோரையும், பெற்றோரையும். குருவையும். மரியாதைசெய்யும் குணமுடையவர்கள்.

எல்லாருக்கும் உதவி செய்வார்கள். தங்கள் படிப்பில் கவலையுடன் இருப்பார்கள். அவர்களது கல்வியையும், திறமையையும் கண்டு அரசனும் குடிகளும் அதிக சந்தோஷம் அடைந்தார்கள்.

---

### விசுவாமித்திரர் யாகம்

அப்பொழுது அங்குள்ள ஒரு காட்டில் விசுவாமித்திரர் என்ற ஒரு ரிஷி தபசு செய்துகொண்டிருந்தார். அவர் விடாமுயற்சியுள்ளவர். அவர் ஒரு யாகம் செய்ய ஆரம்பித்தார். அப்பொழுது ராக்ஷஸர் சிலர் வந்து யாகத்தைக்கெடுத்தார்கள். அதிலும் தாடகை என்னும் ராக்ஷஸி மகா கொடியவள். இவள் செய்யும் அக்கிரமம் பொறுக்கமுடியாமல் விசுவாமித்திரர் இவர்களை அடியோடே நாசம் செய்யவேண்டுமென்றும், அதை இந்த ராஜகுமாரர்களான ராமலக்ஷ்மணரைக்கொண்டுதான் முடிக்க வேண்டுமென்றும் தீர்மானித்து, தசரதருடைய அரண்மனைக்கு வந்தார். சக்ரவர்த்தி அவரை உபசரித்து, ஆசனத்தில் இருக்கச்செய்து என்னவேண்டுமென்று கேட்டார். அதற்கு அவர், தான்செய்யும் யாகத்தை ராக்ஷஸர் வந்து கெடுத்துவிடாதபடி தசரதரின் பிள்ளைகளில் மூத்தவரான ராமரை உதவிக்கு அனுப்பும்படி கேட்டார். அரசர் சிறு குழந்தையை அனுப்ப பயந்தார். ஆனால் அவ

ருடைய குருவான வஸிஷ்டர், அனுப்புவதால், இவர்களுக்கு க்ஷேமமும் கீர்த்தியும் உண்டாகு மென்றும், பயப்படாமல் அனுப்புவது நல மென்றும் அரசனுக்குப் புத்தி சொன்னர். உடனே அரசர் ராமரையும் லக்ஷ்மணரையும் விசுவாமித்திரருடன் குருவார்த்தைக்குக் கட்டு பட்டுச் சம்மதித்து அனுப்பினர்.

இவ்விருவரையும் அவர் அழைத்துக் கொண்டுபோய் அவர்களுக்கு அநேக வித்தை களையும் மந்திரங்களையும் கற்பித்தார். வரும் வழி யில் தாடகை என்னும் ராக்ஷஸியும் ராமரால் கொல்லப்பட்டாள். விசுவாமித்திரர் காட்டில் தான் யாகம்செய்யும் யாகசாலைக்கு வந்து யாகம் செய்ய ஆரம்பித்தார். வழக்கம்போல் அசுரர் கள் யாகத்தைக்கெடுக்க வந்தார்கள். அவர்களை ராமர் தன் வில்லிலிருந்துவிட்ட அம்புகளினுல் கொன்ருர். பிறகு விசுவாமித்திரர் தன் யாகத்தை முடித்துக்கொண்டு சந்தோஷமாக இருந்தார்.

---

## சீதா கல்யாணம்

அக்காலத்தில் மிதிலை என்ற நகரத்தை ஜன கர் என்ருெரு மஹா சாதுவும் நல்லவருமான அரசர் ஆண்டுவந்தார். அவருக்கு சீதை யென்ற ஒரு பெண் உண்டு. அவளுக்குக் கல்யாணம் செய் யும் வயது வந்துவிட்டது. அந்த ஜனகமகா

ராஜனிடம் சிவபிரானல் கொடுக்கப்பட்ட ஒரு வில் இருந்தது. அவர், அந்த வில்லை யார் வளைத்து நாணேற்றுகிருரோ, அவர்க்கே தன் பெண் சீதையைக் கொடுப்பதாக எல்லா தேசத்து அரசர்களுக்கும் தெரிவித்திருந்தார். விசுவாமித்திரரையும் தமது சிஷ்யர்களுடன் வரும்படி வேண்டிக்கொண்டார். இவ்விதம் அரசர்களை அழைத்து ஒரு தைரியமான காரியத்தைச் செய்பவருக்கே பெண்ணைக்கொடுப்பதாக ஏற்படுத்தும் கல்யாணத்துக்கு **சுயம்வரம்** என்று பெயர்.

**சுயம்வர** தினத்தன்று மிதிலைநகர் வெகு அழகாக அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. எல்லா அரசர்களும் வந்து சேர்ந்தார்கள். விசுவாமித்திரரும் ராம லக்ஷ்மணருடன் வந்து சேர்ந்தார். வில் சபை நடுவே கொண்டுவந்து வைக்கப்பட்டிருந்தது. ஒவ்வொருவராக அநேக அரசர்களும் ராஜகுமாரர்களும் வில்லையெடுத்து வளைக்கப் பார்த்தார்கள். ஒருவராலும் தூக்க முடியவில்லை. கடைசியாக விசுவாமித்திரருடைய கட்டளைப்படி ராமர் எடுத்து சுலபமாக வில்லை வளைத்து நாண் ஏற்றினர். வில்லோ வெகு நாட்பட்டதானதால், வளைத்ததும் முறிந்துவிட்டது. எல்லாரும் ராமருடைய பலத்தையும் பராக்கிரமத்தையும் கண்டு ஆச்சரியப்பட்டுப்

புகழ்ந்தார்கள். ஜனக மகாராஜர் இவ்வித தீரச் செயலைச் செய்த சிறுவன் தசரதச் சக்ரவர்த்தியின் குமாரன் என்று தெரிந்துகொண்டதும் அதிக சந்தோஷப்பட்டார். உடனே தசரதச் சக்ரவர்த்தியை அழைத்துவர தூதரை அனுப்பினர். விசுவாமித்திரர் வந்து தன் குழந்தைகளை அழைத்துப்போனது முதல் தசரதர் தன் குமாரர்களைப்பற்றிக் கவலைகொண்டிருந்தார். ஜனகமகாராஜன் அனுப்பிய தூதர்களால் நல்ல சமாச்சாரம்தெரியவந்ததும், அதிகசந்தோஷங் கொண்டு சகல பரிவாரங்களுடனும் ராமரது கல்யாணத்திற்குப் புறப்பட்டு மிதிலை வந்து சேர்ந்தார். உடனே ராமருக்கு சீதையைக் கொடுத்து கல்யாணம் செய்வித்தார். அதே சமயத்தில் பரதர், சத்துருக்கினர், லக்ஷ்மணர் ஆகிய மூவருக்கும் கல்யாணம் முடிந்தது. முடிந்ததும் ஊருக்குப் புறப்பட்டார்கள்.

---

## பரசுராமர் தோல்வியடைந்தது

அக்காலத்தில் பரசுராமர் என்றொரு பிராமணர் இருந்தார். அவர் வில்வித்தையிலும் வாட்போரிலும் தேர்ந்தவர். அவர் எப்பொழுதும் தோளில் கோடாலி கொண்டு போவார். அதுதான் அவருக்கு ஆயுதம். அவரது தகப்பனரான ஜமதக்கினியை ஒரு அரசன் கொன்றுவிட்டான்.

அவர் அதற்காகப் பழிக்குப்பழி வாங்கவேண்டு மென்று தனக்கு முன் எதிர்ப்பட்ட க்ஷத்திரிய ராஜாக்கள் எல்லோரையும் கொன்றுவந்தார். அக்காலத்தில் எல்லா அரசர்களும் அவரைக் கண்டமாத்திரத்தில் பயந்து ஓடி ஒளிவார்கள்.

தசரதச்சக்ரவர்த்தி, குமாரர்களின் கல்யாணத்தை முடித்துக்கொண்டு சந்தோஷமாக ஊருக்குப் புறப்படும்பொழுது இந்தப்பரசுராமர் தன் கோடாலியுடன் எதிர்ப்பட்டார். உடனே தசரதர் நடுங்கிப் பயந்து என்ன ஆகுமோ என்று கவலை கொண்டார். பரசுராமர் ராமரைக் கண்டு "நீ என்ன ஒரு பழைய வில்லை ஒடித்து விட்டதற்குக் கர்வங்கொண்டாய்! இந்த வில்லை வளை பார்ப்போம்" என்று சொல்லி ஒரு வில்லைக் கொடுத்தார். பலசாலியான ராமர் அந்த வில்லை வாங்கி வளைத்து, ஒரு அம்பைப் பூட்டி பரசுராமரை அடிக்கக் குறி வைத்தார். பரசுராமர் பயந்து, தன் காலம் வந்துவிட்டதென்று தெரிந்துகொண்டு, தன்னுடைய பலத்தை ராமரிடம் கொடுத்துவிட்டு, இனி ஒருவரையும் கொல்வதில்லை என்று சொல்லி, மலையாளப் பிரதேசத்தில் தபசு செய்யப் போய்விட்டார். எல்லாரும் ராமருடையசாமர்த்தியத்தைக் கண்டு மெச்சி, சந்தோஷித்து, அயோத்திவந்து சேர்ந்தார்கள்.

## பட்டாபிஷேக (முயற்சி)

சில காலம் சென்றதும் தசரதச் சக்ரவர்த்தி தனக்கு வயதாகிவிட்டபடியால் தவம் செய்யக் காட்டிற்குப் போகவேண்டுமென்றும், தனது மூத்த குமாரரான ராமருக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்றும் தீர்மானித்தார். அவரது குருவான வசிஷ்டர் பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய பிரயத்தினங்களைச் செய்தார். மந்திரிகள் ஊரை அலங்காரம் செய்யும்படி சொன்னர்கள். எல்லாருக்கும் நல்லவரும் குணசாலியுமான ராமருக்கு பட்டாபிஷேகம் ஆகப்போகிறதென்று ஊரார்கேட்டதும்சந்தோஷித்தார்கள்.

---

## மந்தரை சூழ்ச்சி

கைகேயியிடம் மந்தரை என்று ஒரு வேலைக்காரி உண்டு. அவள் முதுகு வளைந்த கூனி. அவளை ராமர் சிறு வயதில் பரிகாசம் செய்வதுண்டு. அதனுல் கூனிக்கு ராமரைக் கண்டால் பிடிக்காது. ஆகையால் இந்த ராமருக்குப்பட்டாபிஷேகம்செய்யக்கூடாதென்று தீர்மானித்தாள். உடனே கைகேயியிடம் சென்று ராமருக்குப் பட்டாபிஷேகம் செய்தால் பிறகு கைகேயிக்குப் கௌரவம் குறையுமென்றும், அதைத்தடுத்து கைகேயியின் குமாரனுன பரதனுக்குப் பட்டம்

கட்டும்படி அரசனை வேண்டிக்கொள்ளும்படியும் சொன்னாள். முதலில் கைகேயி இந்த யோசனைக்கு இணங்கவில்லை. அவளது மனதைக் கூனி கலைத்துஇணங்கும்படி செய்தாள்.கைகேயி தசரதருக்கு விசேஷ உதவி செய்தவள். அவளிடம் தசரதருக்கு வெகு அன்பு. அவர் கேட்டதையெல்லாம் கொடுப்பதாக முன்னமேயே ஒருமுறை வாக்களித்திருந்தார். ராமருக்குப் பட்டாபிஷேகப் பிரயத்தினம் செய்துவிட்டு தசரதர் கைகேயியிடம் சென்றார். கைகேயி தனக்கு முன்னமேயே கொடுப்பதாகச் சொல்லியிருந்த வரத்தின்படி தன் மகன் பரதனுக்குப் பட்டம் கட்ட வேண்டுமென்றும், ராமரைப் பதினான்குவருஷம் காட்டிற்கு அனுப்பவேண்டுமென்றும், தசரதரை வாய் கூசாமல் கேட்டாள். தசரதர் என்ன செய்வார்! பாவம்!! இவ்வார்த்தையைக் கேட்டதும் திடீரென்று இடிவிழுந்ததுபோல் கீழே பிரக்ஞையில்லாமல் விழுந்தார். ராமரிடம் அவருக்கு விசேஷ அன்பு. நல்ல குணமுள்ள ராமரைக் காட்டிற்குப் போகச் சொல்வதென்றால் மனம் துணியுமா? ஆனால் கைகேயிக்கோ கேட்ட வரத்தைக் கொடுப்பதாக முன்னமேயே வாக்களித்திருக்கிறார். ராமர் அந்த சமயம் அங்கு வந்தார். கைகேயி அவரைப் பார்த்து

"உனது தகப்பனுர் உன்னைக் காட்டிற்குப்போய் பதினுன்கு வருஷம் வாசம் செய்யும்படியும், பரதனுக்குப் பட்டம் கட்டும்படியும் கட்டளையிடுகிறுர்" என்று சொன்னுள்.

---

## வனத்திற்குப் புறப்படுதல்

இதைக் கேட்டதும் ராமர் சந்தோஷமாகக் கைகேயியை நமஸ்கரித்துக் காட்டிற்குப்போகப் புறப்பட்டார். அவரது மனைவி சிதை தானும் கூட வருவேன் என்று சொன்னபடியால் அவளையும் கூட அழைத்துக்கொண்டார். அவரது தம்பி லக்ஷ்மணருக்கு ராமரிடம் வெகு அன்பு. பால்யம் முதல் அவரைவிட்டு ஒருபொழுதும் பிரியாதவர். ஆகையால் அவர் தானும் ராமருக்கு உதவியாக அவர்களுடன் கூடவே வருவதாகப் புறப்பட்டார். மூவரும் தங்கள் ராஜ கோலங்களைக் களைந்து மரவுரி தரித்து, சாதாரண ஜனங்கள் போலவே வனவாசத்திற்குப் புறப்பட்டார்கள். ராமருக்குப் பட்டாபிஷேகம் என்று எதிர்பார்த்த அயோத்திமா நகரவாசிகள் இதைக்கேட்டு வியசனத்தில் மூழ்கினுர்கள்.

பிரக்ஞையற்றுக் கீழேவிழுந்த தசரதச் சக்ரவர்த்தி ராமரைக் காணுமல் அப்படியே இறந்துவிட்டார். அந்தச்சமயம் பரதரும், அவருடன்

கூடவே இணைபிரியாமல் இருக்கும் தம்பி சத்துருக்கினரும் ஊரில் இல்லை. ஆகையால் தசரதச்சக்கிரவர்த்திக்குக் கடைசிகாலத்தில் நான்கு பிள்ளைகள் இருந்தும், ஒருவரும் சமயத்திற்கு உதவாமல் பிராணனை விடும்படி நேரிட்டது.

---

## குகனைக் காணுதல்

காடு நோக்கிப் புறப்பட்ட ஸ்ரீராமர், சீதை, லக்ஷ்மணர் மூவரும் கூடவந்த ஜனங்களிடம் உத்திரவு வாங்கிக்கொண்டு கங்கைக்கரை வந்து சேர்ந்தார்கள். அங்கே ஓடம் செலுத்தும் காட்டரசனான குகன் என்பவன் இவர்களைக் கண்டு, நமஸ்காரம் செய்து இம் மூவரையும் அன்புடன் உபசரித்து, ஓரிடத்தில் ஏற்றி, அக்கரை கொண்டுபோய் ஜாக்கிரதையாக விட்டான், சக்ரவர்த்தியின் குழந்தைகள் இவ்விதம் வனவாசம் செய்யநேர்ந்ததே என்று மிகவும் வருந்தினான்.

---

## பரதரின் மேன்மைக் குணம்

தசரதச் சக்ரவர்த்தி இறந்ததும் பரதருக்கு ஆள் அனுப்பி வரவழைத்தார்கள். பரதரும், சத்துருக்கினரும் வந்ததும் தகப்பனார் இறந்ததையும், ராமர் காட்டுக்குப் போய்விட்டதையும்,

கேட்டு இதற்குக் காரணமான கைகேயியைக் கோபித்து தனக்குப் பட்டம் வேண்டியதில்லை யென்றும், தன் தமையனுக்கே பட்டம் உரித்தானதென்றும், அவர் ஆளவேண்டுமேயொழிய தான் ஆள நியாயமில்லை யென்றும் சொல்லி, தகப்பனுருக்குச் செய்யவேண்டிய உத்தரக் கிரியைகளை முடித்துக்கொண்டு ராமரைத்தேட, தெற்கு நோக்கிப் புறப்பட்டுப் போனுர்.

---

## ராமரைத்தேடிப் புறப்படுதல்

பரதர் ராமரிடம் உண்மையான அன்பும் பக்தியும் பூண்டவர். போகும் வழியில் ராமர் தங்கிய இடத்தையும் படுத்த படுக்கையையும் கண்டு, 'ஐயோ! சக்ரவர்த்திக்குரிய சுகங்களை அனுபவித்த ராமர் எவ்விதம் இங்கு படுத்துறங்கினரோ, என்னென்ன கஷ்டங்களை அனுபவித்தாரோ' என்று வருந்தினர். இவைகளுக்குக் காரணம் தானே என்று தன்னையும் தனது தாயையும் நொந்து கொண்டார். பிறகு ராமரைக்கண்டு நமஸ்கரித்து ஊருக்குவந்து பட்டம் கட்டிக்கொண்டு ராஜ்யத்தை ஆளவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்.

---

## பாதுகா பட்டாபிஷேகம்

ராமரோ தகப்பனர் வார்த்தைப்படி நடப்பதே, ராஜ்யபோகம் அனுபவிப்பதை பார்க்கி

லும்மேல் என்றும், அவர் கட்டளைப்படி பதி ஞன்கு வருஷகாலம் காட்டில் வசிக்கவேண்டு மென்றும், தகப்பனுர்வார்த்தைப்படி பரதனையே ஆளும்படியும், சொன்னர். பரதன் "ராமர் இல் லாதபடி நான் அயோத்திக்குள் நுழையேன். அவர் வரும்வரை அவரது பாதுகைகளையா வது கொண்டுபோய் அவைகளுக்குப் பட்டாபி ஷேகம் செய்வித்து ராமரின் பிரதிநிதியாக ராஜ் யத்தை நடத்துவேன்" என்று ராமரின் பாது கைகளை வாங்கி அவைகளைத் தன் தலைமேல் தூக்கிக்கொண்டு "நந்திக் கிராமம்"வந்துசேர்ந்து பாதுகைகளுக்குப் பட்டாபிஷேகம்செய்து ராம ரின் பிரதிநிதியாகத் தான் ராஜ்ய பரிபாலனம் செய்துவந்தார். "தமயன் வரும்வரை ஒருவித சுகத்தையும் விரும்பமாட்டேன்" என்று மன உறுதியுடன் இருந்தார். "லக்ஷ்மணன் ராமனு டைய துக்கத்தைப் போக்கப் பிறந்ததால் மேம் பாடானுன். நானே அவரது துக்கத்திற்குக் காரணம் ஆனேன்" என்று அடிக்கடி வருந்து வார்.

———

## பஞ்சவடியில் வசித்தல்

ராமர் முதலியவர், தங்களை அடிக்கடி அயோத்தியிலிருந்து ஜனங்கள் வந்து பார்ப்ப தால் அவர்களுக்கு சிரமம் அதிகம் ஆகிறது

என்று எண்ணி, எல்லாரும் கோதாவரி தீரத்தில் பஞ்சவடி* என்னும் இடத்திற்குச் சென்றார்கள். போகும்வழியில் அநேக ரிஷிகள் இவர்களுக்கு உபசரணைசெய்து ஆசிர்வாதம் செய்தார்கள். முக்கியமாக அகஸ்திய ரிஷி இவருக்கு நல்ல வில்லும் அம்பறாத்தூணியும் கொடுத்துதவினார். பஞ்சவடியில் ஒரு பர்ணசாலை லக்ஷ்மணன் ஏற்படுத்த அதில் சுகமாக வாழ்ந்து வந்தார்கள்.

---

## சூர்ப்பனகையைத் தண்டித்தல்

தெற்கே இலங்கை என்ற ஒரு தீவு உண்டு. அதில் ராவணன் என்ற ஒரு ராக்ஷஸன் ஆண்டு வந்தான். அவன் அதிக பராக்ரமசாலி. அவனுக்கு கும்பகர்ணன், விபீஷணன் என்ற இரண்டு இளையசகோதரர் உண்டு. ராவணனுடைய சைன்யங்கள், காடுகளில் தவம்செய்யும் ரிஷிகளை ஹிம்சித்து வந்தன. இது விஷயமாக ரிஷிகள் இராமரிடம் முறையிட்டார்கள். ராமர் பஞ்சவடியில் வசிக்கும்பொழுது ராவணனது தங்கை சூர்ப்பணகை ராமரிடம் வந்து தன்னைக் கல்யாணம் செய்துகொள்ளும்படி வேண்டிக்கொண்டாள். இதைக்கேட்ட பக்கத்திலிருந்த லக்ஷ்மணன்

---

* பஞ்சவடி = ஐந்து ஆலமரங்கள் அடர்ந்து வளர்ந்திருக்கும் இடம்.

கோபங்கொண்டு அவளது மூக்கை அறுத்து விட்டான். அவள் அலறிக்கொண்டு லங்கைக் குச்சென்று பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்ற எண்ணத்துடன் ராவணனிடம் ராமர் மனைவி யான சீதையின் அழகைப்பற்றி வர்ணித்தாள். ராவணனுக்கு சீதையின் அழகைக் கேட்டதும் அவளை அடையவேண்டுமென்ற கெட்ட என்ணம் உண்டாயிற்று. சீதையைத் தூக்கிக் கொண்டு வரவேணுமென்று ஆசை ஏற்பட் டது. அதற்கு ஒரு சூழ்ச்சி செய்தான்.

---

## மாரீசன் வதம்

தனது ஆட்களில் ஒருவனான மாரீசனை மான்போல் வேஷம் போட்டுக்கொண்டு பர்ண சாலைக்குப் பக்கத்தில் போகச்சொன்னான். அந்த மானைக்கண்ட சீதை அதைப் பிடித்துத் தரும் படி ராமரைக்கேட்க, அவர் அதை வெருட்டிப் பின் தொடர்ந்து வெகுதூரம் போனார். மானைக் கடைசியாக ஒரு அம்பால் அடிக்க, அது கீழே விழுந்து இறந்தது. இறக்கும்பொழுது மாரீசன் ‘ஏ! லக்ஷ்மணா! ஏ! சீதா!’ என்று ராமருடைய குர லுடன் கூவி விழுந்தான். இதைக்கேட்ட சீதை ராமருக்கு ஆபத்து வந்துவிட்டது என்று நினைத்து லக்ஷ்மணனை உதவிக்குப் போகும்படி

சொன்னுள். தமயன் சம்சாரம் சொன்ன வார்த்தையைத் தட்டாமல் லக்ஷ்மணன் சீதையைத் தனியே விட்டுவிட்டுப் போனுன்.

---

## சீதையை ராவணன் அபகரித்தல்

இவ்விதம் சீதை தனியே இருப்பதற்காகவே சமயம் நேரவேண்டுமென்று ராவணன் மாரீசனைக்கொண்டு இந்த யுக்தி செய்தான். உடனே ஒரு சந்யாசி வேஷம் போட்டுக்கொண்டு ராவணன் சீதை இருக்கும் பர்ணசாலைக்குப் போய் அவளைத் தூக்கி எடுத்து, தன் ரதத்திலேற்றிக் கொண்டு ஆகாயமார்க்கமாக லங்கையை நோக்கிப் புறப்பட்டான். போகும் வழியில் சீதை தனது நகையை ஒவ்வொன்ருக, கீழே போட்டுக்கொண்டே போனுள்.

---

## ஜடாயு எதிர்த்தல்

*ஜடாயு என்னும் கழுகரசன் சீதையின் குரலைக் கேட்டதும் ராவணனை எதிர்த்தான். ஆனுல் ராவணனுல் இறகு அறுக்கப்பட்டு மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். ராவணன் சீதையை லங்கைக்குக் கொண்டுபோய் அசோக வனத்தில் வைத்துக் காவல் போட்டுவிட்டான்.

---

* ஜடாயுவும் தசரதரும் பால்ய சிநேகிதர்கள். ஆகையால் தசரதருடைய மருமகளுக்கு ஏற்பட்ட ஆபத்தைத் தீர்க்க ராவணனேடு சண்டை செய்தான.

## சகோதரர் சீதையைத் தேடிச் செல்லுதல்

சற்று நேரத்திற்கெல்லாம் சகோதரர் இருவரும் பர்ணசாலைக்குத் திரும்பி வந்தார்கள். சீதையைக் காணவில்லை. ராமருக்குத் துக்கம் மேலிட்டது. எங்கெங்கும்தேடத் தலைப்பட்டார்கள். கடைசியாகஜடாயுவைக்கண்டார்கள். அந்தக்கழுகரசன் தசரதச்சக்கிரவர்த்திக்கு நண்பன். ஆனபடியால் ராமரிடம், சீதையை ராவணன் கொண்டுபோனதையும் தான் எதிர்த்ததையும், ராம கார்யத்தில் பிராணனை விடும் பாக்கியம் தனக்குக் கிடைத்ததையும் சொல்லிப் பிராணனை விட்டான். அவனை எடுத்து துக்கத்துடன் அடக்கம் செய்துவிட்டு தெற்கு நோக்கிப்புறப்பட்டார்கள்.

---

## கபந்தனைக் கொல்லுதல்

அங்கே கபந்தன் என்ற ஒர் அரசன் கைக்குள் இருவரும் அகப்பட்டனர். அவனைக் கொன்று தப்பிப் பின்னும் தெற்கே சென்றனர்.

---

## கிஷ்கிந்தை நகரம்

கிஷ்கிந்தை என்ற ஒரு நகரம். அதில் வாலி என்றொரு குரங்கரசன் இருந்தான். அவன்

அதிக பராக்ரமசாலி. அவனுக்குத் தம்பி சுக்ரீவன் என்பவன். வாலியின் குமாரன் அங்கதன் என்பவன். சகோதரர் இருவரும் ஒற்றுமையாக வாழ்ந்துவந்தார்கள். பிறகு ஒருசமயம் ஒரு அசுரன் வாலியோடு யுத்தத்திற்கு வந்தான். வாலி அந்த அசுரனைத் துரத்திக்கொண்டு ஓடும் பொழுது அசுரன் ஒரு குகைக்குள் நுழைந்தான். சுக்ரீவனைக் குகையின் வாசலில் காத்திருக்கும்படி சொல்லிவிட்டு, வாலி அசுரனைக் குகைக்குள் பின் தொடர்ந்தான். வெகு நாள் ஆகியும் வாலி திரும்பிவாராமையால், வாலி இறந்துவிட்டானே என்று எண்ணி, அசுரன் திரும்பி வாராதபடி குகைத்துவாரத்தை அடைத்து வைத்துவிட்டு, சுக்ரீவன் ராஜ்ய காரியத்தைத் தமயனுக்குப் பதிலாக நடத்த ஆரம்பித்தான். அவனுக்கு உதவியாக "ஹனுமார்" என்னும் வீரர் மந்திரியாக இருந்தார். சில நாள் கழிந்ததும் குகைக்குள் சென்றவாலி.அசுரனைக்கொன்றுவிட்டுத்திரும்பி வந்தான். குகை வாசல் மூடப்பட்டிருந்தது. பலசாலியானதினால் அடைத்திருந்த பாறையை தள்ளிவிட்டு ஊருக்குள் நுழைந்தான். சுக்ரீவன் தன்னை மோசஞ்செய்துவிட்டதாக எண்ணி அவனைத் திர விசாரிக்காமல் அடித்து வெருட்டிவிட்டான். சுக்ரீவனும் அவனது சைன்யமும்,

ஹனுமாருடன் ஒரு மலையில் ஒளிந்து கொண்டு, வாலிக்குப் பயந்து வாழ்ந்து வந்தார்கள்.

---

## சுக்ரீவனுடன் சிநேகம் செய்தல்

அந்த மலைச்சாரலின் அருகே ராமலக்ஷ்மணர் வந்து சேர்ந்தார்கள். ஹனுமாரின் உதவியால் சுக்கிரீவனுடன் ராமர் சிநேகம் செய்துகொண்டு தீர விசாரியாமல் தம்பியைத் தண்டித்த வாலியைக் கொன்று சுக்ரீவனை அரசனாக்கினார். சுக்ரீவன் தனது சைன்யம் முழுமையும் ராமருக்கு உதவியாக்கினான். சீதைபோகும்பொழுதுபோட்டுவிட்டுப்போன நகைமுடிச்சு ஒன்றை ராமருக்குக்காட்டினான். உடனே சீதையைத்தேட நாலு திக்குகளிலும் தூதர்களை அனுப்பினார்கள். தெற்குத் திசைக்கு ஹனுமாரையும், அங்கதன்,ஜாம்புவான் முதலியவரையும் அனுப்பினார்கள். ஹனுமாரிடம் ராமர் தனது மோதிரத்தைக்கொடுத்து சீதையைக்கண்டால் அவளுக்குக்காட்டி தனது க்ஷேமத்தைத் தெரிவிக்கும்படி சொல்லியனுப்பினார்.

---

## ஹனுமார் தூதராக லங்கைக்குச் செல்லுதல்

ஹனுமார் கணையாழியைப்பெற்றுக்கொண்டு சைன்யத்துடன் தெற்கு சமுத்திரக்கரை வந்து சேர்ந்தார். அங்கேயிருந்த ஒருமலையின்மேல் ஏறி

பெரிய உருவம் எடுத்துக்கொண்டு சமுத்திரத்தைத் தாண்டி லங்கைசேர்ந்தார். அங்கே ஒரு சிறிய உருவம் எடுத்துக்கொண்டு ராவணனுடைய அரண்மனையை யெல்லாம் சுற்றிச்சுற்றி சீதையைத் தேடினர். ஓரிடத்திலும் சீதையைக் காணவில்லை. கடைசியாக அசோகவனம் வந்தார். அங்கே சீதையைச்சுற்றி பல ராக்ஷஸ ஸ்திரீகள் சூழ்ந்து காவல் இருப்பதைக்கண்டார். மெதுவாக ராக்ஷஸ ஸ்திரீகள் தூங்கும் சமயம் சீதையினிடம் வந்து நமஸ்கரித்து தான் ராம தூதன் என்றும், ராமர் சீதையைப்பிரிந்து வருந்துகிருர் என்றும் சொல்லி, தனது வார்த்தையை நம்பும்படி அடையாளமாக ராமர் கொடுத்த கணையாழியைக் கொடுத்தார். சீதைக்குக் கணையாழியைக் கண்டதும் பழைய ஞாபகம் வந்து வருத்தப்பட்டாள். ராமர் தன்னைத்தேடுவதில் முயற்சியுடன் அலைகிருர் என்றுகேட்டு ஒருவாறு சந்தோஷப்பட்டாள். சீக்கிரத்தில் ராமர்வந்து ராவணனைக் கொன்று, தன்னை அழைத்துப்போவார் என்ற நம்பிக்கையினுல் உயிருடன் இருக்கத்தீர்மானித்தாள். ராமரைப்பிரிந்ததுமுதல் அன்ன ஆகாரம் கிடையாது. தன்னை ஹனுமார் பார்த்ததற்கு அடையாளமாக தனது "சூடாமணியை" ராமரிடம் சேர்க்கும்படிக்கும் ஒருமாதத்திற்குள் தன்னை

மீட்காவிட்டால் தான் பிராணனை விட்டு விடுவ தாகவும் சொல்லி அனுப்பினாள். அதை பக்தி யுடன் ஹனுமார் வாங்கிக்கொண்டு நமஸ்காரம் செய்துவிட்டுத் திரும்பப் புறப்பட்டார்.

---

## லங்கா தகனம்

அந்தச் சமயம் ஹனுமாருக்கு ஒரு யுக்தி தோன்றிற்று. தான் மறைவாகவந்துபோவதுசரி யல்ல என்றும், இந்த லங்கையிலுள்ளவர்களுக் குத் தனது வரவைத்தெரிவிக்க வேண்டுமென் றும். அவர்களது நந்தவனத்தை அழிக்கத்தொ டங்கினார். உடனே அநேகர் இவரைப்பிடிக்கமுன் வந்தார்கள் அநேகராக்ஷஸரைஹனுமார்கொன் றார். கடைசியாக ராவணன் குமாரன் இந்திரஜித் இவரை பிரம்மாஸ்திரத்தால் கட்டி ராவணன் முன்கொண்டுபோய் நிறுத்தினான். அவன் ஹனு மாரைக் கொன்று விடும்படி சொன்னான். ஆனா லும் விபீஷணர் என்னும் ராவணனது தம்பி, மிக்க நற்குணம் வாய்ந்தவராதலால் தூதரைக் கொல்லுதல் ராஜதர்மம் அன்றுஎன்றுஎடுத்துச் சொன்னார். உடனே இவரதுவாலில் துணியைச் சுற்றி எண்ணெயில் நனைத்துக் கொளுத்தி விட் டார்கள். அதைக்கொண்டு அனுமார் வீடுவீடா கத் திரிந்து லங்கை முழுவதையும் நெருப்பிற்கு

இரையாக்கினர். இந்தஹநுமார் வாயுவின்குமா ரர். தேவர்களால்பலவரங்கள் பெற்றவர். அதிக பலம்கொண்டவர். ஆகையால்இவரைநெருப்பு சுடவில்லை. உடனேசமுத்திரத்தில் வாலை நனை த்து நெருப்பை அணைத்துக்கொண்டு, திரும்ப வும்சமுத்திரத்தைத் தாண்டி, தன் வரவைஎதிர் பார்த்து நிற்கும் தனது பரிவாரங்களுக்கெதிரே வந்து சேர்ந்தார். சிதையைக்கண்டுவிட்ட சந் தோஷச் செய்தியை எல்லோரும் ராமருக்குத் தெரிவிக்க ஓடினர்கள். அனுமார் 'கண்டேன் சிதையை; கண்டேன் சிதையை' என்று சொல் லிக்கொண்டு ராமருக்கெதிரே திடீரென்று தோன்றினர். சூடாமணியைக் கொடுத்தார். சிதையின் வரலாற்றையும், ராவணனுடைய கோட்டை அமைப்பு முதலிய பல ரகசியங்களை யும், ராமருக்குத் தெரிவித்தார். ராமருக்கு சிதை இருக்குமிடம் தெரிந்ததால், ஒருவாறு தேர்தல் உண்டாயிற்று. எல்லோரும் யுத்தத்திற்குத் தயா ராய்ப்புறப்பட்டார்கள். எல்லோரும் புறப்பட்டு சேதுக் கரைக்கு வந்தார்கள். சமுத்திரத்தைத் தாண்டுவதற்கு ஒரு அணைகட்டினர்கள். அதன் வழியாக லங்கை சேர்ந்தார்கள்.

## ராவணன் மந்திராலோசனை செய்தல்

லங்கையிலுள்ளவர்கள் "இவ்வளவுசீக்கிரத்தில் ராமர் சண்டைக்குவந்து விடுவார்" என்று எண்ணவே இல்லை. ஆலோசனை செய்ய ஒரு சபைகூட்டி யோசனை செய்தார்கள். சீதையை ராவணன் தூக்கிக்கொண்டு வந்தது பிசகென்றும், அவன் திருப்பி கொண்டுபோய் ராமரிடம் விட்டு விட்டு மன்னிப்புக்கேட்பதே நியாயமென்றும், கும்பகர்ணன் எடுத்துச்சொன்னான். விபீஷணரும் ராவணனுக்குப் புத்திமதி அவ்வாறே கூறினார். ராவணன் இவர்கள் வார்த்தையைக் கேட்கவில்லை. அதனால் விபீஷணர் அக்கிரம காரியத்திற்குத்தான் தமயனுக்கு உதவியாக இருக்கமாட்டேன் என்று சொல்லி, ராமரிடம் வந்து சரணம் அடைந்தார். ராமரைத்தவிர மற்றவர்கள் முதலில் இவன் மோசக்காரனாக இருக்கலாம், நமதுபலத்தை அறிய ரகசிய ஒற்றனாய்வந்திருக்கலாம் என்று சந்தேகப்பட்டார்கள். ஆனால் ஹனுமார் மூலமாக இவரது நல்ல குணத்தைத் தெரிந்து கொண்டார்கள். சத்துருவாக இருந்தாலும், சரணம் அடைந்ததால் ரக்ஷிக்கவேண்டும் என்று ஸ்ரீராமர் எடுத்துக் கூறினார். விபீஷணருக்கு அபயப்பிரதானம் செய்து, காப்பாற்றுவதாக வாக்களித்தார்.

---

## ராம ராவண யுத்தம்

ராவணன் முதலியவர்கள் யுத்தத்திற்கு வந்தார்கள். ராமர், லக்ஷ்மணர், ஹநுமார், சுக்ரீவன், அங்கதன், ஜாம்புவான் முதலானவர்கள் இதர வானரசேனைகளின் உதவியால் ராவணனுடைய சேனையை அழித்துக்கொன்றார்கள். அநேக ராக்ஷஸர்கள் இறந்தார்கள். கும்பகர்ணனும் யுத்தத்திற்கு வர அவனையும் கொன்றார்கள். இந்திரஜித் என்னும் ராவணனுடைய மகனை லக்ஷ்மணர் கொன்றார். கடைசியாக ராவணன் யுத்தத்திற்குப் புறப்பட்டு ராமருடன் எதிர்த்தான். ராமர் வெகு சிரமப்பட்டுராவணனைக்கொன்றார். இவ்விதமாக லங்கையிலுள்ள கொடிய ராக்ஷஸர்கள் அடியோடு அழிந்தனர்.

---

## சீதையை மீட்டல்

உடனே விபீஷணரை லங்கைக்கு அரசனாக்கி, அவரைக் கொண்டு இறந்தவர்களுக்கு ஈமக்கடன் செய்வித்தார். பிறகு சீதையை அழைத்துவரும்படி சொன்னார். சீதை வந்ததும் அவளை அக்கினியில் மூழ்கிப்பரிசுத்தமாகும்படி செய்தார். அவளும் தனது கற்பின் மேன்மையால் நெருப்புத் தன்னை சுடாமல் பரிசுத்தமாகி,

ராமர் பாதங்களில் பணிந்தாள். ராமரும் தான் வெகு நாளாகப் பிரிந்த சீதையை திரும்ப அடைந்ததற்கு சந்தோஷித்தார். எல்லோரும் குதூஹலத்துடன் லங்கையைவிட்டுப் புறப்பட்டு வடதிசை நோக்கி வந்தார்கள். வரும் வழியில் ரிஷிகள் ஆசிர்வாதம் செய்தார்கள். தேவர்களும் ராவணனுடைய கொடுமையிலிருந்து நீங்கினேம் என்று ராமனுக்கு வந்தனேபசாரம் செய்தார்கள்.

---

## பரதனைக் காணல்

இவ்வித சம்பவங்கள் நடப்பதற்குள் பதினலு வருஷகாலம் ஆகிவிட்டது. பரதர் தன் தமயன் 14–வருஷம் முடிந்ததும் வராவிட்டால் 'அக்கினியில் குதித்துஉயிரைஇழப்பேன்' என்று சொன்ன உறுதிமொழி ஞாபகத்திற்கு வர தான் பரத்வாஜரிஷி, ஆச்ரமத்திற்குச் சென்று வருவதற்கு முன்னமேயே தன் வரவை பரதருக்குத் தெரிவிக்கும்படி ஹனுமாரை அனுப்பினர். ஹனுமார் போகும்போது பரதர் 14-வருஷம் ஆகியும் 'ராமர் வரவில்லையே! ராமரைக் காணுமல் நான் பிராணனை வைத்திருப்பதா' என்றுதிமூட்டி அக்நியில் குதிக்கும் தருணத்தில் இருந்தார். அப்பொழுது ஹனுமார் 'வந்துவிட்டார் ராமர்' என்றுசொல்லிக்கொண்டுபரதரைக்கண்டுநமஸ

கரித்து ராமரைப்பற்றிய நல்ல சமாசாரத்தைத் தெரிவித்து அவரது உயிரைக் காப்பாற்றினர்.

---

## பட்டாபிஷேகம்

உடனே ராமர், சிதை, லக்ஷ்மணர் எல்லோரும்பரிவாரங்களுடன்வந்துசேர்ந்தார்கள். எல்லோரும் அயோத்தி நகரடைந்ததும், தம்பியர் சூழ, சிதாதேவி பக்கத்திலிருக்க ஹனுமார் விபீஷணர் முதலியவர் ஸ்தோத்திரஞ் செய்ய, ரிஷிகள் தேவர்கள் ஆசிர்வதிக்க, தேவ துந்துபி முழங்க, வெகு விமரிசையாக ராஜ்ய பட்டாபிஷேகம் ஸ்ரீ ராமருக்கு நடந்தது.

வெகு நாள் இவர் குடிகளிடம் அன்பாக ராஜ்ய பரிபாலனம் செய்தார்.

ராமர் ஆளும் காலத்தில் குடிகள் வெகு திருப்தியாகஇருந்தார்கள். மாதம் மும்மாரிபெய்தது. வியாதிகள், பஞ்சம் கிடையாது. அல்பாயஸில் இறப்பவரும் இல்லை. விதவைகளும்கிடையாது. தரித்திரம் என்பதே கிடையாது. எல்லா ஜாதியாரும்தெய்வபக்தி நிறைந்து. அவரவரது ஜாதி விதிப்படி தொழிலை நடத்தி வந்தார்கள். சக்கிரவர்த்தியான ராஜாவைப் புகழ்ந்து வாழ்ந்து வந்தனர்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

---

PRINTED AT THE RAJA PRESS, MADURA